கடவுள்துணை.

# செந்தமிழ்



தொகுதி-கஉ.] ஆனந்தஹு வைகாசிமீ [பகுதி-எ.
Vol. XII. May—June. 1914. No. 7.

## திருவிளையாடற்புராணம் 64-வதுபடல ஆராய்ச்சி.

பரஞ்சோதிமுனிவர் மொழிபெயர்த்தருளிய திருவிளையாடற் புராணம் 64-வதுபடலத்தில், திருஞானசம்பந்தசுவாமிகள் திருப் புறம்பயத்தின்கண் ஒரு வணிகமாதின் துயரொழிக்கும்வண்ணம் அரவாலிறந்தவணிகனுக்கு ஆருயிர்வழங்கி; அவ்விருவரையும் மணம்புணரும்படிசெய்தருளினர் என்று கூறப்பட்டுள்ளது ஆனால், திருஞானசம்பந்தசுவாமிகள் திருமருகலில் அங்ஙனம் செய்தருளிய தாகத் திருத்தொண்டர்புராணத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்விருசரிதங்களையும் சென்ற 19-ம் நூற்றாண்டில் ஆராய்ச்சிசெய்த சில சுதேசவிற்பன்னர்கள், திருவிளையாடற்புராணமுடையார்கூறு வது சரித்திர ஆராய்ச்சியிற் சிறிதும் நம்பத்தக்க உண்மையாகமாட் டாதென்றும், திருத்தொண்டர்புராணத்திற்சொல்லப்பட்டிருப்பதே உண்மையாகவிருக்கவேண்டுமென்றும், மேற்கூறிய இருபுராணங் களிலும் சொல்லப்படும் சரித்திரங்களிரண்டும் ஒரேசரித்திரமாகத்தா னிருக்கவேண்டுமென்றும் தத்தமக்குத் தோன்றியவாறு கூறிப்போந் தனர். இதனை, ஆராயப்புகுமுன்னர் அவ்விருபுராணங்களிலுங் கூறப்படும் சரித்திரங்களைச் சுருக்கமாய் அடியில்வரைகின்றேன்.

திருத்தொண்டர் புராணத்தில், (திருஞானசம்பந்தமூர்த்திநாய னார்புராணத்தில்) சொல்லப்பட்டிருக்கும் சரித்திரமாவது:— வைப் பூரின்கண் ஏழுபுதல்விகளையுடைய தாமன் என்னும் ஒருவணிகன், தனதுமருகனுக்கு மூத்தகுமாரத்தியை விவாகஞ்செய்துகொடுப்ப தாய்வாக்களித்துப் பிறகு வேறொருவனிடம் பெருந்தனம்பெற்று,

ஸ்ரீ:

# திருக்கோளூர்ச்சாசனங்கள்.

செந்தமிழ் (தொகுதி-கஉ பகுதி-ருல்) ககசுச-ஆம் பக்கத் தொடர்ச்சி.

---

## சாசனம் VII.

### சுவாமி வைத்தமாநிதியின்கர்ப்பக்ருஹம் வடபுறம் உச்சி.

காலம்:—மாறவர்மன் சுந்தரபாண்டியற்கு யாண்டு 11-வது.

விஷயம்:—திருக்கோளூர்ப் பூரங்குறிச்சியூரார், தங்களூர் அதுவரை ஒட்டுக்கடமையாயிருந்தபடியால் ஊர் குடியில்லாமற் பாழாய்ப் போய்விட்டதென்று மந்திரி மழவைராயன்மூலம் ஷை அரசனுக்கு அறிவிக்க, அவனும் அவ்வூரை அளந்து விளைந்தநிலத்துக்கு இவ்வளவென்று கடமையேற்படுத்தியது.

குறிப்பு:—பாண்டிநாடு அளக்கப்பட்டபோது இவ்வூரும் முதல் வீரபாண்டியன்காலத்தி லளந்து தரம்விதிக்கப்பட்டிருந்ததென்றும், (சர்வே, ஸெட்டில்மெண்டு) அக்காலத்து நிலம்அளக்கும் 18-அடிக் கோலுக்கு வீரபாண்டியன்கோலென்றும் மரக்காலுக்கு முதல்வீர பாண்டியனென்றும் பெயரிடப்பட்டிருந்ததென்றும் தெரிகிறது. அக்காலத்தில் விளைந்தநிலத்துக்குமாத்திரம் தீர்வைவிதிக்கும்படி ஏற்பாடுசெய்யப்பட்டது.

### மெய்க்கீர்த்தி.

ஆழ்வார்திருநகரிப் பாண்டியசாசநம் V, VII பார்க்க.

கோமாறவர்மன் சுந்தரபாண்டியதேவற்கு யாண்டுபதினொன்றுவது நாள்முப்பதினால் மதுரோதையவளநாட்டு மாடக்குளக் கீழ்மதுரைக் கோயிற் பள்ளியறைக்கூடத்துப் பள்ளிப்பீடமழவராயனில் எழுந்தருளியிருந்து திருவழுதிவளநாட்டுத் திருக்கோளூர் பூரங்குறிச்சி ஊரார் செயதிருவாய்மொழிந்தருளினபடி தங்களூருக்கு இவ்வூர்கள் முன்பு ஒட்டுக்கடமையாக இறுத்துப்போதுகையாலே குடியிலி பாழ(ாய்)க்கிடக்கையில் இவ்வூர்கள் நான்கெல்லைக்குட்பட்ட நிலத்தில் பழம்தேவதானபள்ளி(8)ச்சந்தம்நீக்கி நீக்கிஉள்ள நிலம் பதினெட்(ட) டியானவீரபாண்டியன்கோலால் நிலம்அளந்து பயிர்பார்த்து விளைந்த நிலத்துக்குக் கடமையும் அந்தராயமும்உள்பட காருக்கு மரக்கால்(?)

காசு அறுமாவ(9)ரையே அரைக்காணியும் முதல்வீரபாண்டியனால் நெல்லு நாற்கலமும் இறைப்பு இறைத்துவிளைந்தநிலத்துக்கு இவ் வரிசையில் ஒன்றுபாதியும் எள் வரகு தினை சாமை விளைந்தநிலத் துக்கு மரக்கால் பதினறுமேனித்திரமும் (10) ஒன்றும் (?) பசானத் துக்கும் இவ்வரிசையும் புஞ்சைக்கு மரக்கால் இத்திரம் முக்காலும் ஆகப் பதினெளன்றுவதுமுதல் இறுப்பதாக இறைகட்டப்பெறவேணு மென்று ஐயன்மழவராயன் நமக்குச்சொன்னமையில் இத்திருக்கோ ளூரும் பூரங்குறிச்சியும் முன்பு ஒட்டுக்கடமையாக இறுத்துப்போ துகையாலே குடியிலி பாழாய்க்கிடக்கையால் இவ்வூர்கள் நான்கெல் லைக்குள்பட்டநிலத்தில் பழந்தேவதானப்பள்ளிச்சந்தம்நீக்கி நீக்கி உள்ளநிலம் (12) பதினெட்டடியான வீரபாண்டியன்கோலால் நிலம் அளந்து பயிர்பார்த்து விளைந்தநிலத்துக்குக் கடமையும் அந்தராய மும் உட்படக் காருக்கு மரக்கால் காசுஅறுமாவரையேவரைக்காணியு முதல்வீரபாண்டி (13)யனல் நெல்லு நாற்கலம் இறைப்புஇறைத்து விளைந்தநிலத்துக்கு இவ்வரிசையில் ஒன்றுபாதியும் எள் வரகு தினை சாமிவிளைந்தநிலத்துக்கு மரக்கால் பதினறுமேனிதிரமும் ஒன்றும் பசானத்துக்கு இவ்வரிசை புஞ்சைமர(14)க்கால்திரம் முக்காலும்ஆக இவ்வாண்டுமுதல் இறுப்பதாக இ(றை)கட்டிகுடுக்கவென்று வரியி லார்எழுத்திட்ட உள்வரியும் நம்மோலையும் தரச்சொன்னோம். கைக் கொண்டுசெயவென்று திருவாய்மொழிந்தருளினர். இவை திருமல்லி நாட்டு(15)த் தடங்கண்ணிசிற்றாருடையான்.........யநின்றுவான் வீரசோழதேவனை குருகுலத்தரையன் எழுத்து. இவை செவ் விருக்கைநாட்டு சக்கரபாணிநல்லூர்அரையன் விரதமுடிச்சானை பல்லவராயன் எழுத்து.

———:(o):———

## சாசனம் VIII.

ஷைசாசநத்தை கோநேரின்மைகொண்டான் ஸ்திரப்படுத்தியது.

(16)திரிபுவனசக்கரவர்த்தி கோநேரின்மைகோண்டான்- திரு வழுதிவளநாட்டுத் திருக்கோளூர் பூரன்குறிச்சிஊரார்க்கு தங்களூர் முன்பு ஒட்டுக்கடமையாக இறுத்துப்போதுகையாலே குடியிலி பாழாய்க்கிடக்கையால் இவ்வூர்கள் நான்கெல்லைக்குட்பட்டநிலத்திற் பழந்தேவதானம் பள்ளிச்சந்தநீக்கி நீக்கிஉள்ளநிலம் பதினெட்டடி

யானவீரபாண்டியன்கோலால் நிலம்அளந்து பயிர்பார்த்து விளைந்த நிலத்துக்குக் கடமையும் அந்தராயமும்உட்படக்காருக்கு(18)மரக்காற் காசு அறுமாவரையே அரைக்காணியும் முதல்வீரபாண்டியன் நெல்லு நாற்கலமும், இறைபடஇறைத்துவிளைந்தநிலத்துக்கு இவ்வரிசையி லொன்றுபாதியும் எள் வரகு தினை சாமி விளைந்தநிலத்துக்கு மரக் கால் பதினறு(19)மேனித்தரமும் ஒன்றும்பசானத்துக்கு இவ்வரி சையும்புன்செய்க்கு மரக்கால்திரம் முக்காலும் அகம்பதிஞேன்றுவது முதல் இறுப்பதாக இறைகட்டப்பெறவேணுமென்று ஐயன்மழவ ராயன் நமக்குச்சொன்னமையில் தங்க(20)ளூர் முன்பு ஒட்டுக்கட மையாக இறுத்துப்போதுகையாலே குடியிலிபாழாய்க்கிடக்கையால் இவ்வூர்கள் நான்கெல்லைக்குட்பட்டநிலத்திற் பழந்தேவதானம் பள் ளிச்சந்தம்நீக்கி நீக்கிஉள்ளநிலம் பதினெட்டடியானவீரபாண்டியன் கோலால் நிலமளந்து பயிர்பார்த்து விளைந்தநிலத்துக்குக் கடமையும் அந்தராயமும்உட்பட காருக்கு மரக்காற் காசு அறுமாவரையே அரைக்காணியும் முதல்வீரபாண்டியனல் நெல்லு நாற்கலமும்,இறை படஇறைத்துவிளைந்தநிலத்துக்கு (22)இவரிசையி லொன்றுபாதியும் எள் வரகு தினை சாமிவிளைந்தநிலத்துக்கு மரக்கால்பதினறுமேனித் திரமும் ஒன்றும்பசானத்துக்கு இவ்வரிசையும் புன்செய்க்கு மரக் கால்திரம் முக்காலும் ஆக இவ்வாண்டுமுதல் இறுப்பதாகவும் இட்(23)டு வரியிலாரெழுத்திட்ட உள்வரியும் நம்கேழ்வியும் தரச் சொன்னேம். இவ்வாண்டுமுதல் இப்படியிலே இறுத்துப்போதுக. இவை அரும்பெறற்கூற்றத்துப் புதுப்பேர்க்குளத்தாழ்வான் ஆண்டபி ரான் அழகனை அழகியபாண்டியவிழுப்பரை(24)யன் எழுத்து. யாண்டுபதினென்றுவது நாள்எழுபத்துநாலு இவை ஆண்டனாட்டு பெருமணலூர்அரையன் முடிவழங்கும்பெருமாளான விக்கிரமபாண் டிய உத்தரமந்திரி எழுத்து. இவை செவ்விருக்கைநாட்டு சக்கர பாணிநல்லூர் அரையன் விரதமுடிச்சானை ப(25)ல்லவராயன் எழுத்து.

குறிப்பு:-'மாக்கால்' என்பது மாத்தாலென்றுவாசிக்கும்படியுமிருக் கிறது. பல்லவராயன் ஒருவன், சுந்தரபாண்டியன்சாசனத்திலும் இந்தச்சாசனத்திலும் கையெழுத்திட்டிருப்பதால், கோநேரின்மை கொண்டான், சுந்தரபாண்டியன்காலத்தானென்று தெரிகிறது. எம் மண்டலமுங்கொண்டருளிய ஸ்ரீகுலசேகரதேவர்காலத்திலும் இருந் திருக்கிறார். (ஆழ்வார்திருநகரிச்சாசனம் IV) இதுபோன்று ஆ. சா. Iம், Vம் இவனுற்புதுப்பிக்கப்பட்டிருத்தல்காண்க. இவனைப்பற்றிச் சிவல்துரை யெழுதியிருக்கும் குறிப்பையும்நோக்குக. கோநே ரின்மை=சமானமரன அரசரின்மையைக்—கொண்டான்.

(தொடரும்.)

A. M. சடகோபராமாநுஜாசாரியன்.

# திருப்புகலூர்ச்சாசனங்கள்.

## சாசனம் I.

### உள்மதில் வடபுறம்.

(1) ஸ்வஸ்திஸ்ரீ சக்ரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழதேவர்க்கு1 யாண்டு ௪௫வது மிதுநநாயிற்று பூர்வபக்ஷத்து அத்தத்திநாள் குலோத்துங்கசோழவளநாட்

(2) பனையூர்நாட்டு 2 ப்ரஹ்மதேயத்து தேவலோகம்........ மஹாஸபையோம் இறையிலிநிலம் விலையாவணம் - உடையார் ஸ்ரீ புகலூ

(3) ர்தேவர் ஸ்ரீப்ராஹ்மஸ்வ? க்கு துசெய்தருளும்போது உத்த மாஹ்ராநம்...லோகமாணிக்கசதுர்வேதிமங்கலத்து வரகூர்நம்பி யார்குளத்திற் தெக்கரையி

(4) லே நித்தம் பன்னிரண்டுப்ராஹ்மணர் உண்பதாக ஜெயங் கொண்டசோழமண்டலத்து3ப் புலியூர்கோட்டத்துப் பேரூர்நாட்டு 4 நெற்குன்றத்து நெற்குன்றங்கி

(5) ழான் அற்புதக்கருவுணயகரான களப்பாளராஜர்செய்வித்த சாஸநத்துக்கோயிலிற் ஸ்ரீஹஸ்தவநவிஷ்ணுஸ்வரதேவற்கு இத்தேவர் ஸ்ரீபண்டாரத்தேவஸ்வநுகொண்டு

(6) இச்சாஸநப்படியாக நாங்கள் இறையிலியாகவிற்றுக்கொடுத்தநிலமாவது பார........டன்ஊர் நத்தத்தான் நாற்பத்தெண்ணுயிரப்பொற்கோயில்நம்பி

---

1 குலோத்துங்கன் I, 1070—1118.

2 இது, திருப்புகலூருக்கு 3-மைல் தென்மேற்காயுள்ள பாடல்பெற்ற சிவஸ்தலம்.

3 தொண்டைமண்டலம்.

4 தொண்டைமண்டலம் 24 கோட்டங்களாகவும் அக்கோட்டங்கள் 79 நாடுகளாகவும் பகுக்கப்பட்டிருந்தன. கோட்டங்கள்வருமாறு:—புழல், புலியூர், ஈக்காடு, மணவூர், செங்காடு, பையூர், எயில், தாமல், ஊத்துக்காடு, களத்தூர், செம்பூர், ஆமூர், ஈத்தூர், வெண்குன்றம், பல்குன்றம், இளங்காடு, கலியூர், சிறுகரை, படுவூர், கடிகை, செந்திருகை, குன்றப்பட்டினம், வேங்கடம், வேலூர், புலியூர்க்கோட்டத்தில் குன்றத்தூர், போரூர், மாங்காடு, அமரூர், கோட்டூர் என்றநாடுகள் அடங்கின.

(7) இவ்வூரில் பெலகுடிமக்கள்பக்கல் விலைகொண்டுடையனாய் அனுஷவித்துவாராநிற்ப அவர்பக்கல் நம்பிராட்டியார் புவனிமுழுதுடையார்5விலை

(8) கொண்டுடையராய் அனுஷவித்துவாராநின்று திருவையாறுடைய மஹாதெவர்கோயிலிலே பெருமாளொடுங்கூட எழுந்தருளியிருந்து எங்களுக்கு ஸ்ரீ சனக்ஷத்த

(9) மாக நீர்வார்த்துத்தந்து நாங்களும் நாற்பதுஸம்வத்ஸரத்தில் உடிதெஷம் ஸகிஹப்(?)ப்பொதுவாய் அனுஷவித்துவருகிறநிலத்துக் கருணாகரவதிக்குக்கிழக்கு லக்ஷ்மண

(10) வாய்க்காலுக்குத் தெற்கு முதனுங்கண்ணாற்று ரெண்டாஞ்சதிரத்துவடக்கடை ௰ரு ....ஹாமதிட்டப்படி ருஅடி அருமொழிதேவவதிக்குக்கிழக்கு லக்ஷ்மண

(11) வாய்க்காலுக்குத்தெற்கு முதனுங்கண்ணாற்று ரெண்டாஞ்சதிரத்து

(12) நீதுவஞகீழ்நால்விரித்துகுஉ......நாறேமுக்காலே அரைமா அரைக்காணிமுந்திரிகைக்கீழரையும் காணியாக விலைக்கீழ்முதலுக்கு நம்மிலிசைத்த

(13) விலைப்பொருளற்றுனறகாசுயம் இச்சாலை உண்கைக்கு சூத்ராகாரம் ப்ராஹ்மணர் பன்னிருவர் உண்கைக்கு இறையிலிசெய்துகொடுத்துக்கொண்டு நம்மிலி

(14) சைத்தகாசு கூயம் அந்தக்காசு ரம் ஸ்ரீபண்டாரத்தேகொண்டு இத்தில்

(15) இருக்க......ஆதாரம் இறையிலியாகவும் இப்படிக்கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொளப்பெறுவதாகவும் இந்நிலம் இறையிலியாகவிற்றுக்கொடுத்தோம்6

(16) இறையிலிநிலம் விலையாவணம்செய்துகொடுத்தோம் இதுதெவ......தெவற்கு மாணிக்கனுதவெடுதிமாமைத்து மஹாஸபையேம் இயமைத்துக்கு அழிவுசெய்தார் பஞ்சமஹாபாதக(ர்)கள்

---

5 புவனிமுழுதுடையார் குலோத்துங்கனதுபட்டமஹிஷியென்பர் சோழவம்சசரித்திரமுடையார்.

6 இந்நிலத்திற்கு இன்றும் நெற்குன்றமென்று பெயர்வழங்கப்படுகிறது. வெகுநாள்வரையில் தேவஸ்தானம்வசமிருந்ததென்பது பின்வரும்சாஸனத்தால் வெளியாகின்றதாயினும், யாதுகாரணத்தாலோ இப்பொழுது பராதீனப்பட்டிருக்கின்றது.

## சாசனம் II.

### வெளிமதில் உட்புறம் கோபுரவாசல் மேல்புறம்.

(1) ஸ்வஸ்திஸ்ரீ ஸாலிவாஹனஸகாப்தம் கசுாளஎ௰கு1
(2) கஸ்யாப்தஃ சதஅாறு௰கு இதன்மேல் செலாநின்
(3) ற பிரசோற்பதிஇ செங்கல்மதிள்இடி
(4) ச்சு கல்மதிள்கட்டையில் இந்தகிராமங்கள்
(5) நிலப்பேர்வழி வாதாவிப்பிள்ளையார்கோவில்ம
(6) தினில் குலோத்துங்கசோழன்னுளையில்நடந்ததை
(7) கண்டுகொள்ள
(8) திருப்புகலூர் கட்டளைகிராமம் பேர்வழி
(9) உள்ளூர், கருந்தார்குழலி, தோட்டக்குடி,
(10) வயலூர், யெல்லாக்கிநாச்சி, வன்னத்தாமனச்சி
(11) யி, புகலூர்மனச்செயி, கீழத்தாங்கல்உள்பட்
(12) ரையாள், பாறநல்லூர், நகரி, கடவனபிள்ளையாரு
(13) ம், தேப்பெருமாமங்கலம், சவரிராசன்கட்டளை
(14) மாதிரிமங்கலம் ஊக்கிடை, கயத்தூர் ஊ(உ?)க்கிடை
(15) கருப்பூர் ஊக்கிடை, ஆமைப்பட்டம், பறக்குடி,
(16) தோசைக்கட்டளைஉள்பட சரண்யபுரம்,
(17) நெற்குளம், சகடமங்கலம், ராமன்ந
(18) தீசுவரம் ராமனுதசுவாமிகிருமம்2

---

1 கி. பி. 1751. (இங்கிலிஷ்) இந்நிலங்கள் தெரிந்தமட்டில் கி. பி. 1089 முதல் 1751வரையில், அதாவது 662-வருடங்களாகத் தேவஸ்தானநிலங்களாகஇருந்தது நிதர்சனம். பிறகு சில பராதீனப்பட்டகாரணம்புலப்படவில்லை.

2 ஸ்ரீராமபிரானுல் பூஜிக்கப்பட்டஸ்தலம். திருக்கண்ணபுரம் என்னும் திவ்யஸ்தலத்திற்கு ஒருபர்லாங்குதூரத்திலுள்ளது.

## சாசனம்—III.

### பிரகாரம் தென்புறம்.

(1) ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனசக்கிரவ(ர்)த்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டுடுருவது கன்னிநாயிற்று பூ(ர்வ)பக்ஷத்து பஞ்சமியும் திங்கட்கிழமையும்பெற்ற விசாகத்துநாள் (ராஜே)ந்திரசோழவள நாட்டு கழையி.........பெருமங்கலத்து மடைக்கமைத்த வார்யப் பெருமக்களில் மாகரைத் திருவெண்காடுபட்டனும், இடையாற்றுக் குடி சந்திரசேகரபட்டனும், குண்டூர் திருவெணுமலைபட்டனும் குஞ் சப்பவலைஞுறப்பட்ட

(2) னும் வெனைவோமதில் விலை ஆவணம் - குலோத்துங்க சோழவளநாட்டு பனையூர்நாட்டு ஸ்ரீபுகலூர்தேவர்கோவில் உடையார் ஞுருமங்கலாகார்யர் எழுந்தருளிவித்த ருஷ(ப)வாகனதேவர் ஞுரு விடங்கர் திரிபுவனராண்டே ஸ்ரீதேவர்கன்மிகளுக்கு நாங்கள் விலைக் குக்கொடுத்தநிலமாவது. ஆரப்பிடாகை மீனவநல்லூரில் பெருங் கோவாய்க்காலுக்குவடக்கு முதல்கண்டத்து பட்டர்குளம்நஞ்சைக்கு ..............கிழக்குடையநஞ்சைக்குதெற்கு

(3) ..............கொல்லையும் பொதுவாக நீங்கினநிலத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லையைப் பொதுவாகநீங்கின நிலத்துக்கு வடக்கும் மேல்பாற்கெல்லையுள்ள

(4) மங்கலத்து நித்தானந்தபட்டனும் இடையாற்றி(க்குடியி) லிருக்கும் ஆரியன் பூவக்கபட்டனும் நிலத்துக்குக்கிழக்கும் வடபாற் கெல்லை கண்ணுற்றுவாய்க்காலுக்குதெற்கும்ஆக இசைந்த பெரு நான்கெல்லையுள் நடுவிடம்......லிருந்நிலம் வேலியும் விற்றுக்கொடுத் தோம். தேவர்கன்மிகளுக்குவேண்டிய பெருமக்களோம் விற்றுக் கொடுத்துக்கொள்வதான எம்மிலிசைந்தவிப்பேர்கள் அன்றூடு நெற் காசுசம் இக்காசுநாற்பதும்;

(5) கொண்டபரிசாவது, இந்நாயனூற்கு சந்திராதித்தவரை செங்கழுநீர்த்திருப்பள்ளித்தாம(ஞ்)சாத்துகைக்கு செங்கழுநீர்க் குளம் கொள்ள உடையார் ஞுருமங்கலாகார்யர் இத்தேவர்க்கு

கொடுத்திருக்கிறது. இந்தக்காசுசய் இக்காசுநாற்பதும் இத்தேவர் க(ன்)மிகள்ப்க்கலே ஆவணக்களரியே யக்காட்டேகரிகை. செல வறக்கொண்டு விலைப்பிரமாணஞ்செய்துகொடுத்தோம் இத்தேவர் கன்மிகளுக்கு

(6) ஸபைக்குச்சமைந்த இவ்வாரியப்பெருமக்களோம். இக் குளநிலத்து குடுத்ததுவே விலை.ஆவதாகவும் இதுவே விலைஆவண மாவதாகவும் ................இதுவல்லது வேறுபொருள் மாவறுதிப் பொருள் செலவோலைகாட்டி கடந்தில்லாததாகவும். இப்படி விலைக் கறவிற்றுப் பொருளறக்கொண்டு விற்று விலைப்பிரமாணஞ்செய்து

(7) (6-வது வரியே திரும்ப எழுதப்பட்டிருக்கிறது)

(8) கொடுத்தோம் இத்தேவர்கன்மிகளுக்கு ஸபைக்குச் சமைந்த வாரியப்பெருமக்கள் மாகறைபதி திருவெண்காடுபட்டனும், இடையாற்றுக்குடி சந்திரசேகரபட்டனும், குண்டூர் திருவெணுமலை பட்டனும், குஞ்சப்பவலைஞாற்பட்ட னும், இவ்வளவோம்பேர்கள் பணிக்கு இந்தஸபைப்பிரமாணமாயெழுதினேன் இவ்வூர் கடிகாமத்தி யத்தனலங்

(9) காரப்பிரியன்கீழ்க்கணக்கு இவ்வூர் கடிகாலமத்தியத்தன் ஏறுசேவகன் மணிவண்ணனுன சாதுப்பிரியன் எழுத்தென்றும், இப் படிக்கு இவை மாகறைத் திருவெண்காடுபட்டன் எழுத்தென்றும்...

குறிப்பு:—இதிற்கண்ட செங்கழுநீர்த்திருப்பள்ளித்தாமஞ்சாத்துகைக்காக ஏற்பட்டகுளம் இன்றும் சந்நிதிக்குத் தென்கிழக்கிலிருக்கிறது. அதனை யாது காரணத்தாலோ தூர்த்துவருகின்றனர்.

---

இலக்கணவிளக்கபரம்பரை,

திருவாரூர்-சோமசுந்தரதேசிகன்.